[20th September 1961

Sri M. KALYANASUNDARAM : இந்தப் பள்ளிகளுக்குப் பயிற்சி பெற வருகிறவர்கள் எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டு வருகிறார்கள் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : மனுக்கள் கோரப் படுகின்றன. பள்ளிக்கு 20 பேர்கள் வீதம் இருநூறு பேர், முந்நூறு பேர் வரையிலும் மனுக்கள் பொறுக்கப்படுகின்றன. ஆர்.டி.ஓ. கருத்தும் பெறப்படுகிறது. இரண்டு ஜில்லாக்களுக்கு ஒரு பள்ளிக்கூடம் என்று ஏற் படுத்துவதனால் இரண்டு ஜில்லாவின் பிரதிநிதிகளுக்கும் இடம் அளிக்கப் படுகிறது.

Sri M. KALYANASUNDARAM : அதிகமான மனுக்கள் வருவத னால் ஜில்லாவுக்கும் ஒரு பள்ளிக்கூடம் என்ற அடிப்படையிலாவது அமைக்க முயற்சி செய்வார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அடுத்த ஆண்டிலே ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒரு பள்ளிக்கூடம் என்றுகூட அல்ல—தாலுகா வுக்கு ஒரு பள்ளிக்கூடம் என்று ஏற்படுத்த வேண்டுமென்று நிதி அமைச்சர் சொல்லியிருப்பதைக் கவனிக்கவேண்டும். இன்னும் இங்கே 20 பேர்களுக்கும் அதிகமாகக் கூடச் சேர்க்கலாமா என்பது பரிசீலிக்கப்படுகிறது. எவ்வளவு தூரம் இதைப் பயன்படுத்தலாமோ அவ்வளவு தூரம் பயன்படுத்திக் கொள்ளப்படும்.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : பயிற்சி பெற்றவர் களுக்கு சர்க்கார், உத்தியோகம் கொடுக்குமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அதுதான் இல்லை. பயிற்சி பெற்றவர்கள் திரும்பவும் கிராமத்திற்குச் சென்று விவசாயம் செய்யவேண்டும். ஒரு பள்ளி பரமக்குடியில் அமைக்கப்பட்டிருக்கிறது. ஒரு பள்ளியில் முதலிலே வந்தவர்களில் உத்தியோகம் இல்லை என்று தெரிந்ததும் 4 பேர் போய்விட்டார்கள். இப்பொழுது இருக்கும் மாணவர் களுக்குத் தெரியும் பயிற்சி கொடுப்பதெல்லாம் அவர்கள் ஊரில் சென்று விவசாயம் செய்வதற்காக என்று.

Sri M. KALYANASUNDARAM : பயிற்சி கொடுப்பவர்களுக்கு சப்சிடி கொடுக்கப்படுகிறதா ? எந்தவிதமான சப்சிடி கொடுக்கப்பட்டுவரு கிறது ? தமிழில் அதற்குப் பாடபுத்தகங்கள் வெளியிடப்பட்டிருக்கிறதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : தமிழில் இப்பொழுது பாடபுத்தகங்கள் இல்லை. ஆனால் தமிழில்தான் பாடம் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. முப்பத்தைந்து ரூபாய் சப்சிடி கொடுக்கப் படுகிறது. முப்பது ரூபாய் சாப்பாட்டிற்கும், 5 ரூபாய் அவுட் ஆப் பாக்கட் அலவன்ஸ் என்றும்.

Sri M. K. SOMASUNDARAM : பயிற்சி காலம் எவ்வளவு ? ஆண்டு ஒன்றுக்கு எத்தனை பேர் சேருகிறார்கள் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : ஒரு ஆண்டு பயிற்சிகாலம். இப்பொழுது சேர்க்கப்பட்டிருப்பவர்கள் 20 பேர்.

*Colleges—Arts College, Thanjavur*

*1660-P. Q.—Sri M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether a final decision has been taken on the proposal for converting the Arts College at Thanjavur, as an Agricultural College; and

(*b*) if so, the details thereof?

20th September 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) & (*b*). It is proposed to start a second Agricultural College in the public sector during the Third Plan period. Its location has not yet been decided.

SRI M. KALYANASUNDARAM: எந்தெந்த ஜில்லாக்கள் இப்பொழுது பரிசீலனையில் இருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: மதுரையும், தஞ்சாவூரும் பரிசீலனையில் இருக்கின்றன.

*Liquor permits (Relaxation of rules)*

* 1660-Q *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நமது ராஜ்யத்தில் உல்லாச பிரயாண ஸ்தலங்களில் மதுவிலக்கு பர்மிட் விதிகளை தளர்த்தும் உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: : No Sir. But the rules have been sufficiently liberalised, consistent with the principles of prohibition, to enable both the foreign tourists and the visitors from other States in India to obtain liquor for bona-fide requirements without delay or inconvenience.

*Nuisance cases*

* 1660-R *Q.*—SRI A. A. RASHEED. Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government are aware of the fact that of late there has been an increase in the number of cases of persons committing nuisance in the streets in the City of Madras; and

(*b*) if so, whether any instructions have been issued to the Police to check this nuisance?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir. On the contrary there has been a decline this year;

(*b*) Does not arise. Patrols are being regularly deputed to check the nuisance, even otherwise.

*Tanks—Repairs to Pudur tank*

*1660-S Q.—SRI M. SELVARAJ (on behalf of SRI M. P. SARATHI): கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வேலூர் தாலூக்கா, பூதூர் கிராம ஏரியை மராமத்து செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுத்துள்ளதா ? விவரமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The Executive Engineer (Food Production), Vellore, has taken up the repairs to the Pudur tank in Pudur village of Vellore taluk. The sanctioned estimate of Rs. 7,200 provides for repairs to tank-bund, rough stone escape weir, and the three sluices. The work is now under execution.